# 37

## என்ன நெருக்கடியோ?

திருவல்லிக்கேணி ஹைரோடு காலை நேரத்தில் அவ்வளவு சந்தடி யுள்ளதாக இருப்பதில்லை. இரண்டு பக்கங்களிலும் செல்லும் டிராம், ஏதாவதொரு காலை மோட்டார், சில சைக்கிள்கள்-ஓரிரண்டு குப்பை வண்டிகள்-இவற்றைத் தவிர வேறு தடபுடலே கிடையாது. ஜன நடமாட்டம் கூட அப்பொழுது அவ்வளவு அதிகமாக இருப்பதில்லை.

பொழுது போகாததால் ஜன்னல் வழியாகத் தெருவைப் பார்த்துக் கொண்டிருந்தேன். எதிர்வீட்டில் ஒரு மார்வாடியின் கடை அதற்கு மட்டும் காலையிலிருந்து ஜனங்கள் வந்து போய்க்கொண்டே இருந் தார்கள். நகைகளை மூடிக்கொண்டு வந்து கொடுத்துவிட்டு அவன் கொடுத்த பணத்தை வாங்கிக்கொண்டு போனார்கள்.

ஒரு ரிக்ஷா வந்துநின்றது-அந்தவீட்டு வாசலில். ரிக்ஷாக்காரன் வண்டியிலிருந்த பெண்ணுக்கு கடையைச் சுட்டிக் காட்டினான். அவள் கீழே இறங்கி ஒரு தடவை தெருவை மேலும் கீழுமாகப் பார்த்தாள். அவள் ஒரு நாயுடு ஸ்திரீ; வயது சுமார் முப்பதிருக்கும். நல்ல தேகக் கட்டும் அழகும் உடையவளாக இருந்தாள். ஒரு ஸ்பன் ஸில்க் புடவையை நேர்த்தியாகக் கட்டிக்கொண்டிருந்தாள். சடக்கென்று மார்வாடியின் கடைப்படியில் ஏறினாள்.

தன் மடியிலிருந்து இரண்டு சிறு காப்புகளை எடுத்து அவன் கையில் கொடுத்தாள். ஒரு வருஷத்துக் குழந்தையின் கைக்காப்புகளாக இருக்க வேண்டும். கொடுக்கும்போது அவள் முகம் விகாரமடைந்தது. அவளுடைய கைகளில் ஒரே ஒரு ஜதை காப்புகள் தான் இருந்தன. கழுத்தில் சரடு கூட இல்லை.

மார்வாடி காப்புகளைத் திருப்பித் திருப்பிப் பார்த்தான். உறை கல்லில் உறைத்துப் பார்த்தான்.

'பத்து ரூபாய்!' என்று சுருக்கமாகச் சொன்னான் கடைசியாக.

பாரததேவி, *16.07.1939*

'முக்கால் பவுன் ஆயிற்றே!' என்று அவள் ஆச்சரியத்துடன் கேட்டாள். அந்த ஆச்சரியத்தில் அவள் துக்கம்கூட மங்கிப் போயிற்று!

'மட்டம்-கலப்பு-பத்து ரூபாய் ஜாஸ்தி' என்று ஒவ்வொரு வார்த்தை யாக அரைகுறைத் தமிழில் சொன்னான் மார்வாடி.

'இல்லையப்பா! இப்பொழுதுதான் புதிதாகச் செய்தது!'

மார்வாடி பதிலே சொல்லாமல் காப்புகளைத் திருப்பிக் கொடுக்கும் பாவனையாகக் கையை நீட்டினான்.

அவளுடைய முகத்தில் அப்பொழுது தென்பட்ட துக்கத்தைப் பார்க்கக்கூட எனக்கு மனம் வரவில்லை. நான் கவனிப்பது அவளுக்குத் தெரியாது. யாராவது தான் அங்கிருப்பதைப் பார்ப்பதற்கு முன் அவ்விடம் விட்டுச் சென்று விடவேண்டும் என்று அவள் பதைத்துக் கொண்டிருந்தது அவளுடைய ஒவ்வொரு அங்க சேஷ்டையிலும் வார்த்தையிலும் வெளியாயிற்று. அதை உடனே கிரகித்துக்கொள்ள மார்வாடிக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டுமா?

'பனிரண்டு ரூபாயாவது-' என்று அவள் கெஞ்சிக்கொண்டு சொல்லி முடிப்பதற்கு முன் மார்வாடி காப்பை கீழே வைத்துவிட்டான். வேறு காரியத்தைக் கவனிப்பது போல் மற்றொரு பக்கம் திரும்பிக் கொண்டான். பாவம் ஸ்திரீ என்ன செய்வது என்று தெரியாமல் அப்படியே நின்று போய் விட்டாள்.

'உங்க கொளந்தெ காப்பாம்மா?' என்று பக்கத்தில் மற்றொரு பெண்ணின் குரல்கேட்டவுடன்தான் அவளுக்கு நினைவு வந்தது. அவளை அறியாமல் அவள் கண்களில் நீர் ததும்பிக் கொண்டிருந்தது. கேள்விக்கு ஒன்றும் பதில் சொல்லாமல் காப்புகளைக் கையில் எடுத்து மூடிக்கொண்டு போய் ரிக்ஷாவில் ஏறி உட்கார்ந்து கொண்டாள்.

அப்பொழுது, நான் அவளை நன்றாகப் பார்க்க முடிந்தது. நடை உடை பாவனைகளில் ஒரு கம்பீரமும் மேன்மையும், நாகரிகமும் இருந்தன. ஒரு கௌரவமான குடும்பத்தைச் சேர்ந்தவள் என்பது தெரிந்தது. ஆனால் கவலையும் வேதனையும் அவள் அழகைப் பிய்த்துத் தின்று கொண்டிருந்ததும் தெரிந்தது.

'எங்கே போகணும்மா?' என்று ரிக்ஷாக்காரன் கேட்டான்.

'வேறெ கடைக்கு!' என்று கோபத்துடன் சீறினாள் அவள்.

'இந்தக் கடைதான் கொஞ்சம் நாணயம், தாராளம் கூட அம்மா!'

'சொன்னபடி கேள்!' என்று அவள் எரிந்து விழுந்தாள்.

இரண்டு வீடு தள்ளி மற்றொரு கடை. அதில் ஒரு வாலிபன் உட்கார்ந் திருந்தான். அவனிடம் காப்புகளைக் காட்டினாள். அவன் ஒருதரம் அவளையும் மற்றொரு தரம் காப்புகளையுமாக மாறிமாறிப் பார்த்துக் கொண்டு, 'வேறே-எங்கே-காமுச்சீங்கோ?' என்று புன்சிரிப்புடன் கேட்டான்.

'இல்லை-ஆமாம்!' என்று சொல்லும்பொழுது அவள் புழுவாகத் துடித்தாள்.

'எட்டு ரூபாய்!' என்றான் அவன் சாவதானமாக.

தலைகிறுகிறுத்தது போல அவள் தள்ளாடினாள். கடைக்கதவை ஒரு கையால் பிடித்துக்கொண்டாள். மார்வாடி அவளைப் பார்த்து புன்சிரிப்புச் சிரித்தான் மறுபடியும். காப்புகளை அவன் கையிலிருந்து பிடுங்குபவள் போல அவற்றைத் திரும்பி வாங்கிக் கொண்டுபோய் ரிக்ஷாவில் ஏறினாள்.

'எங்கே போகணும்மா?'

'வீட்டுக்குத் திரும்பு!' என்று சொன்னவள் மறுபடியும் எதையோ நினைத்துக்கொண்டு நடுநடுங்கினாள். அவள் முகத்தில் பயமும் துக்கமும் தென்பட்டன.

'இல்லை, இரு. இந்தா இதை முதல் கடையில் கொடுத்து, பத்து ரூபாய் கொடுப்பான் வாங்கிக்கொண்டு வா!'

ரிக்ஷாவில் உட்கார்ந்து கொண்டிருந்தவள் கண்ணீர் உதிர்த்து விம்மினாள். மறுநிமிஷம் சுய நினைவு பெற்று யாராவது தன்னை கவனிக்கிறார்களோ என்று அங்குமிங்கும் பார்த்தாள்.

திருடன் போல நான் சடக்கென்று பின்வாங்கி மறைந்தேன்.

அவளுடைய வாழ்க்கையில் அன்று என்ன நெருக்கடியோ?

கோல்ட்ஸ்மித் எழுதியது என் மனதிற்கு வந்தது.

'சோகக் காட்சிகளைக் கண்டு உருகும்படியும் வைத்து. துயரத்தை அகற்ற சக்தியும் அற்றவனாய் என்ன ஏன் சிருஷ்டித்தாய், ஈசா?'

●